[28th April 1960

### *Khadi and Village Industries Board*

*853 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா :

(அ) 1958-ல் நம் மாநிலத்திற்கு காதி அண்டு வில்லேஜ் இன்டஸ்டிரஸ் போர்டிலிருந்து எந்தெந்த இனத்திற்காக எவ்வளவு கிராண்ட் அனுமதித்திருக்கிறார்கள் ?

(ஆ) அவற்றில் இதுவரை எந்தெந்த இனத்தில் எவ்வளவு தொகை பயன்படுத்தப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) A statement [a] is placed on the table of the House.

SRI A. VEDARATHNAM : இந்த மான்யத் தொகையில் கடன் கொடுத்ததுதான் முக்கியமாக பயன்படுத்தப் பட்டிருக்கிறது, மான்யமாக கொடுத்ததை அவ்வளவாக பயன்படுத்தவில்லை. இதற்கு காரணம் என்ன? காலம் கடந்து வந்ததால் முழுத் தொகையும் பூர்ணமாக பயன்படுத்தப் படவில்லை என்று மேஜை மேல் வைக்கப்பட்டிருக்கிற அறிக்கை கூறுகிறது. ஆகவே அவை உரிய காலத்தில் கிடைப்பதற்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது? கொடுக்கப்பட்டிருக்கிற தொகை லாப்ஸ் ஆகாமல் வரு கிற ஆண்டில் உபயோகப்படுத்தப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: செலவு செய்யப் படாத தொகை லாப்ஸாகாது. அடுத்த வருடத்தில் உபயோகிக் கலாம். உரிய காலத்தில் சாங்க்ஷன் கிடைக்காததினால்தான் பூராவையும் செலவு செய்யமுடியாமல் இருந்ததற்கு காரணம். வருட ஆரம்பத்திலேயே இதை சாங்க்ஷன் செய்யவேண்டுமென்று இப்பொழுது காதி கமிஷனுக்கு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு அவர்களும் செய்வார்கள் என்றும் எதிர்ப்பார்க்கப் படுகிறது.

SRI A. VEDARATHNAM : மான்யத்தொகை அதிகமாகப் பயன்படுத்தப்படவில்லை. கடன் தொகைதான் ஜாஸ்தியாக பயன் படுத்தப்பட்டிருக்கிறது. கடன் தொகை திருப்பிக் கொடுக்கப் படவேண்டியது. மான்யத் தொகை திருப்பிக்கொடுக்க வேண்டிய தில்லை. அதை பூராவும் பயன்படுத்தாததற்குக் காரணம் தெரிய வில்லை. கடந்த வருடம் அம்பர் சர்க்காவிற்காக கொடுக்கப்பட்ட தொகை பயன்படுத்தப் படாமல் இருந்தது. அது என்ன வாயிற்று? எவ்வளவு பயன்படுத்தப்பட்டது, எவ்வளவு பாக்கி யிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அம்பர் சர்க்காவைப் பற்றி தனி கேள்வி வேண்டும். மான்யமாக இருந்தால் கூட செலவு செய்யாமல் மிச்சமாக இருப்பது அடுத்த ஆண்டில் உப யோகப்படுத்தப்படும். அது வீண் போகாது. முழுச் செலவு செய்யப்படாததற்குக் காரணம் முன்பு குறிப்பிட்டபடி உரிய காலத்தில் சாங்க்ஷன் வராததுதான்.

---

[a] Printed as Appendix II on page 773 infra.

28th April 1960]

SRI T. S. RAMASWAMI : ஏறக்குறைய 33 லட்சத்தில் நாலு லட்சம்தான் செலவாகியிருக்கிறது, 1958-59-ல். அடுத்த வருடத்தில் இதைச் செலவாக்கி விடுவோமென்று சொல்லியிருக்கிறார்கள். எவ்வளவு செலவாகியிருக்கிறது. எவ்வளவு செலவாகாமல் விடப்பட்டது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அங்கத்தினர் என்ன கணக்கு சொல்கிறார்கள் என்று தெரியவில்லை. இதற்கு தனி கேள்வி வேண்டும்.

SRI A. GOVINDASAMY : விழுப்புரத்தில் இருக்கிற வனஸ்பதி ப்ளான்டை சோப் ப்ளான்டாக மாற்றுவதற்கு காதி போர்ட் திட்டத்தின் கீழ் எடுத்துக் கொண்டு நடத்த அரசாங்கம் முயற்சிக்குமா ?

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது சாத்தியமா இல்லையா என்று பார்க்கவேண்டும். தனி கேள்வி போட்டால் பதில் சொல்கிறேன்.

*Misappropriation of funds in Queen Mary's College*

* 854 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of S8| M. P. Sarathi : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மேரி ராணியார் பெண்கள் கல்லூரியில் நடந்த பணக் கையாடல் பற்றிய விசாரணை முடிந்து விட்டதா ?

(ஆ) மொத்தம் கையாடல் மதிப்பு எவ்வளவு ?

(இ) யார் யார் மீது என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No case of misappropriation of public money in the Queen Mary's College, Madras, has been brought to the notice of the Government.

(*b*) and (*c*) Do not arise.

SRI K. Vinayakam rose.

MR. SPEAKER: What is the hon. Member going to ask, when the answer is 'No'?

SRI K. VINAYAKAM: Was there not a case wherein the amount obtained from the Director of Harijan Welfare in the form of grants to be paid to students was not given to them in time when they were entitled to get it in time ?

THE HON. SRI C. SUBRAMANIAM: With regard to misappropriation, there was no case of misappropriation in the Queen Mary's College. I do not know whether the hon. Member is giving information about cases of misappropriation or irregularities in accounts.

MR. SPEAKER: I think the hon. Member may put a separate question. That will be easy to answer.